REGD. NO. M. 6311 ★ தனி இதழ் 1 அணா ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily ✱ The Official Organ Of The D.P.F.

மலர் 4] சென்னை: ஆனி 23உ வெள்ளி (6–7–56) ★ ★ வெளியூர்: ஆனி 24உ சனி (7–7–56) [இதழ் 19

## சுதந்திர மலேயாவிற்கு தேசியக் கீதம்!

### அமைத்துத் தருவோருக்கு 15,000 டாலர் பரிசு

மலேயா, வரும் ஆண்டில் சுதந்திரம் பெறும்போது இசைப்பதற்காக தேசியக் கீதம் ஒன்று அமைத்துத் தருவோருக்கு 15,000 மலேயா டாலர் தருவதாக பிரதமர் தெங்கு அப்துல் ரெஹ்மான் ஒரு பரிசுத் திட்டத்தை வெளியிட்டிருக்கிறார்.

'சுதந்திர மலேயா' என்ற கருத்தை அடிப்படையாகக் கொண்டு, மக்கள் இதயம் கவரும்வண்ணம் கீதம் அமையவேண்டும் என்றும், உலகெங்கணுமுள்ள கவிவாணர்களும் இப்போட்டியில் கலந்து கொள்ளலாம் என்றும், முதல் பரிசு 10,000 மலேயா டாலராக இருக்கும் என்றும் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

# சட்டசபைமுன் 10,000 மக்கள் ஆர்ப்பாட்டம்

## பீகார் பகுதிகளை மேற்கு வங்கத்திற்கு மாற்றக் கூடாதென ஒலி முழக்கம்

### மந்திரிசபை விலக வேண்டுமெனக் கோரிக்கை

ராஞ்சி, ஜூலை 5—

'வங்கத்தின் கோரிக்கை அநியாயமானது! பீகார் பிரதேசங்களை மேற்கு வங்கத்திற்கு மாற்றாதே! டில்லி மசோதாவை நிறைவேற்றாதே! மாநிலக் குழுவின் சிபாரிசு தவறானது!'—என்பன போன்ற கோஷங்களை எழுப்பிக்கொண்டு, பீகார் சட்டசபை முன் ஏராளமானோர் பெரும் ஆர்ப்பாட்டம் செய்தனர்.

கடந்த பொதுத் தேர்தலுக்குப் பிறகு ராஞ்சியில் இப்போதுதான் முதல் முதலாக சட்டசபை கூடுகிறது.

பீகார், மற்றும் மேற்கு வங்க (பிரதேச மாற்ற) மசோதா குறித்து விவாதிப்பதற்காக பீகார் சட்டசபையின் மூன்று நாளைய விசேட கூட்டம் துவங்கியபோது தான் இந்த ஆர்ப்பாட்டம் நடத்தப்பட்டிருக்கிறது.

ஜார்கண்ட் கட்சி, மற்றும் ராஞ்சி நக்ரிக் சங் என்ற இருகட்சியினரும் கூட்டாகச் சேர்ந்து சுமார் 10 ஆயிரம் மக்களைத் திரட்டி வந்து இந்த ஆர்ப்பாட்டத்தை நடத்தியிருக்கின்றனர்.

பீகார் மந்திரி சபை இராஜிநாமாச் செய்யவேண்டும் என்றும் கோரப்பட்டதாம்!

'முதன் மந்திரி சட்டசபையை விட்டு வெளியே வந்து தங்களைச் சந்திக்க வேண்டும்' என்று கோரியிருக்கின்றனர், ஆர்ப்பாட்டக்காரர்கள்!

முதன் மந்திரியும் வெளியே வந்து கூட்டத்தில் பேசியிருக்கிறார்.

"உங்களுடைய எண்ணத்தையும், உணர்ச்சியையும் நான் அறிவேன்; அவற்றை டில்லி சர்க்காருக்குத் தெரிவிக்கிறேன்.

"பீகார் பிரதேசங்களை, மேற்கு வங்கத்திற்கு மாற்றும் மசோதா இங்கு நிறைவேறாது; திருத்தத்துடன் தான் நிறைவேறும்; டில்லி சர்க்கார், நமது கோரிக்கையை அலட்சியப்படுத்தினால் நான் பதவியிலிருந்து விலக ஐந்து நிமிடம்கூட ஆகாது,"

என்று, முதன் மந்திரி டாக்டர் ஸ்ரீ கிருஷ்ண சின்ஹா பேசியிருக்கிறார்.

கூட்டத்தினர் பெரும் ஆரவாரம் செய்துவிட்டு கலைந்து சென்றிருக்கின்றனர்.

சட்டசபையைச் சுற்றிலும் பலத்த போலீஸ் பாதுகாப்பு இருந்ததாம்.

## காங்கிரசில் கோஷ்டிச் சண்டை விரிவாகிறது

### இராஜஸ்தானிலும் இரண்டு கோஷ்டிகளாம்

சமரசத்திற்கு முயன்ற சாஸ்திரியின் தோல்வி

புதுடில்லி, ஜூலை 5—

இந்தியத் துணைக் கண்டமெங்கணுமுள்ள பிரதேச காங்கிரசுகள் ஒன்றிலாவது கோஷ்டிச் சண்டைகள், கோட்டைக்குள்ளேயே குத்து வெட்டுக் குழப்பங்கள் இல்லாமல் இல்லை என்ற நிலையை, அடுத்தடுத்து வரும் செய்திகள் கூறிக்கொண்டிருக்கின்றன.

மைசூர் பிரதேச காங்கிரசில் பெருத்துவரும் கோஷ்டிச் சண்டை பற்றிய செய்திகள் தொடர்ந்து வந்துகொண்டிருக்கும் போதே, வடநாட்டில் இராஜஸ்தான் பிரதேச காங்கிரசில் தலைதூக்கியுள்ள கோஷ்டிச் சண்டை பற்றி செய்தி தரப்படுகிறது.

இராஜஸ்தான் காங்கிரஸ் இரு கோஷ்டிகளாகப் பிரிந்து உள்ளடிக் குழப்பத்திற்கு ஆளாகியுள்ளதாம்.

இந்தச் சண்டையைத் தீர்த்து வைக்குமாறு, காங்கிரஸ் மேலிடம் இரயில்வே மந்திரியான லால்பகதூர் சாஸ்திரியை அனுப்பி வைத்ததாம்!

அவர் சென்று இரு கோஷ்டிகளுடனும் பேச்சுவார்த்தை நடத்தி, சமரசமாகப் போகுமாறு கோரினாராம்; ஆனால், சாஸ்திரியின் உபதேசம் எடுபடவில்லையாம்! தொங்கிய முகத்தோடு அந்த மனிதர் பாவம், மேலிடத்திடம் தோல்வியை ஒப்புவித்திருக்கிறாராம்!

## பண்டிதரின் ஆணவத்திற்கு மராட்டியர் தரும் பதில்

### மத்திய சட்ட மந்திரி படாஸ்கரும் பதவியிலிருந்து விலகுவார்

மராட்டியத்துடன் பம்பாய் இணைவதற்கு வழி செய்யாமல், மாநில புது அமைப்பு மசோதா அடுத்த மாதம் மக்கள் சபையில் நிறைவேறுமானால், டில்லியில் சட்டத் துறை அமைச்சராயுள்ள எச். வி. படாஸ்கர், பதவியிலிருந்து விலகுவார் என்று தெரியவருகிறது.

நிதிமந்திரியாகவுள்ள தேஷ்முக், இதே விவகாரத்திற்காகப் பதவியைத் துறக்க முடிவு செய்து, இராஜிநாமா தாக்கல் செய்திருப்பது அனைவரும் அறிந்ததே!

படாஸ்கர் இத்தனை நாளும் சர்க்காரில் இருந்துகொண்டே, பம்பாய் நகரம் பற்றிய சிக்கலுக்குத் தீர்வு காண வழி கண்டு வந்தார். அவர் கூறிய வழி, 'படாஸ்கர் வழி' என்றே பெயர் பெற்றுள்ளது.

'பம்பாய் மராட்டியத்துடன் இரண்டாண்டுகளுக்குள் இணைக்கப்பட வேண்டும்; அதற்கிடையில், புதிய மராட்டிய மாநிலத்தின் சர்க்கார் அலுவலகங்கள் அனைத்தும், பம்பாய் நகரிலேயே அமையவேண்டும்,' என்பதே படாஸ்கர் வழியாகும்; ஆனால், பிரதமர் நேரு இந்த வழியையும் ஏற்க மறுத்து, 'ஐந்தாண்டுகளுக்குப் பிறகு யோசிப்போம்' என்று, பம்பாயில் அறிவித்திருப்பது மராட்டியருக்கு நியாயம் வழங்குவதாக ஆகாது என்று படாஸ்கர் கருதுகிறாரெனத் தெரியவருகிறது.

## பீகாரில் உள்ள வங்க மொழிப் பகுதிகள்

### மேற்கு வங்க மாநிலத்திற்கு மாற்றுவதற்கு எதிர்ப்பு

### டில்லி மசோதாமீது பீகார் சட்டசபை விவாதம்

ராஞ்சி, ஜூலை 5—

பூர்ணியா, மான்பூம் மற்றும் சந்தால் மாவட்டங்களின் பகுதிகளை, பீகாரிலிருந்து மேற்கு வங்க மாநிலத்திற்கு மாற்றுவதற்கு, பீகார் சட்டசபையில் பலத்த எதிர்ப்பு தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

பீகார், மற்றும் மேற்கு வங்க (பிரதேச மாற்றம்) மசோதாவினை சட்டசபையில் தாக்கல் செய்து முதன்மந்திரி டாக்டர் ஸ்ரீகிருஷ்ண சின்ஹா விவாதத்தை துவக்கி வைத்தார்.

மசோதாவின்மீது பேசிய பலரும், மசோதாவைக் கைவிட வேண்டும் என்றும், மசோதாவில் கூறியுள்ளபடி பீகாரின் பிரதேசங்களை மேற்கு வங்கத்திற்கு மாற்றக் கூடாது என்றும் குறிப்பிட்டனர்.

அத்துடன் சில உறுப்பினர்கள், 'தேவையானால் தொடர்புடைய பிரதேசங்களில் வாக்கெடுப்பு நடத்தவேண்டும்' என்று கோரினர்.

சுமார் 3,200 சதுர மைல் பிரதேசத்தை மேற்கு வங்கத்திற்கு மாற்ற வேண்டுமென மசோதா கூறுகிறது.

'இந்தப் பகுதிகளில் உள்ள வங்க மொழி வழங்கும் பகுதிகள் அனைத்தும், மொழிவழி மாநில அடிப்படையில் மேற்கு வங்கத்துடன் இணைக்கப்பட வேண்டும்' என்று, 'லோகசேவக் சங்' என்ற கட்சியைச் சேர்ந்த ஒரே ஒரு உறுப்பினர் மட்டும் கோரியிருக்கிறார்.

காங்கிரஸ், ஜார்கண்ட் கட்சியினர், ஒருமூசமாக மசோதாவிற்கு எதிர்ப்புத் தெரிவித்திருக்கின்றனர்.

## 14 வயது வரை இலவசக் கல்வி

### மத்தியப் பிரதேச மாநில சர்க்கார் உத்தரவு

நாகபுரி, ஜூலை 5—

"6 முதல் 14 வயது வரையுள்ள குழந்தைகளுக்கு, எந்தப் பள்ளியிலும் சம்பளம் வாங்கக் கூடாது,"

என்று, மத்திய பிரதேச சர்க்கார் உத்தரவிட்டுள்ளனர்.

எல்லாக் குழந்தைகளுக்கும், இலவச கட்டாயக் கல்வி என்ற நோக்கத்தை ஈடேற்றுவதின் முதற்படி இதுவாகும் என்றும் சர்க்கார் உத்தரவு கூறுகிறது.

சர்க்கார் அல்லாத இதர தனிப்பட்ட பள்ளிகளுக்கு இந்த உத்தரவின் மூலம் ஏற்படக்கூடிய நஷ்டத்தை ஈடுகட்டுவதற்காக ரூ. 15,00,000 ஒதுக்கப்பட்டிருக்கிறது என்றும் கூறப்படுகிறது.

(5-ம் கலத்தின் தொடர்ச்சி)

மொழி தரும்வரை இரயில் நிலையத்திலேயே தங்கவேண்டும் என்று அகதிகளிடம், ஏராளமான சுயநலக்காரர்கள் போதனை புரிவதை சர்க்கார் கண்டுவருகிறது," என்றும் பத்திரிகைக் குறிப்பு கூறுகிறது.

மேற்கு வங்க மாநிலத்தில் மட்டும் சுமார் 2 இலட்சம் அகதிகள் ஏற்கனவே பல முகாம்களில் வாழுகின்றனர்.

## அலகாபாத்தில் 46 சதவிகிதத்தினர் மணமாகாதவராம்!

அலகாபாத், ஜூலை 4—

அலகாபாத் நகரத்தைச் சேர்ந்த மக்களில் 46 சதவிகிதத்தினர் மணமாகாதவர்களாம்

76 சத விகிதத்தினர் மணமாகி விதவையானவர்கள் அல்லது மணவிலக்கு செய்துகொண்டவர்களாம்!

55 வயதுக்கு மேற்பட்டவர்கள் 68 சத விகிதத்தினராம்!

இந்த விபரங்களை சமூகப் பொருளாதார இயக்கம் ஒன்று கணக்கிட்டிருக்கிறது.

## வடநாட்டு அகதிகளின் சண்டித்தனம்

### இரயில் நிலையத்தை விட்டு அகல மறுப்பு

கல்கத்தா, ஜூலை 5—

சீல்டா இரயில் நிலையத்திற்கு, கிழக்குப் பாகிஸ்தானிலிருந்து ஓடிவந்து சேர்ந்த அகதிகள் சுமார் 5,000 பேர், இரயில் நிலையத்தையே அகதிகள் 'முகாம்' ஆக்கிக்கொண்டு, பிரத்தியேகமாக அகதிகளுக்கென அமைக்கப்பட்டுள்ள முகாம்களுக்குச் செல்ல மறுத்துவிட்டனர் என்று கூறப்படுகிறது.

"சீல்டா இரயில் நிலையத்தில் ஏற்பட்டுள்ள நெருக்கத்திற்குக் காரணம், வழக்கத்திற்கு மாறாக அதிகப்படியான அகதிகள் ஓடிவருவதோ அல்லது, அவர்களுக்கு இடவசதி அளிப்பதற்கான ஏற்பாடுகள் இல்லாமையினாலோ அல்ல; மாறாக, சில சுயநலக்காரரின் தூண்டுதலின் பேரில், வந்து சேர்ந்த அகதிகள், இரயில் நிலையத்தை விட்டு அகன்று செல்ல மறுக்கின்றனர்," என்று, சர்க்காரின் பத்திரிகைக் குறிப்பொன்று கூறுகிறது.

"இரயிலில் வந்து சேரும் அகதிகள், அகதிகள் புனரமைப்பு இலாகாவிடம் தங்கள் பெயர்களைப் பதிவு செய்தல் கூடாது—உதவித்தொகை எதும் பெறக்கூடாது—மேற்கு வங்காளத்திலேயே அகதிகள் அனைவரும் வாழ்வளிக்கப்படுவர் என்று அதிகாரிகள் கூறி

(1-ம் கலம் பார்க்க)

நம் நாடு
தி.மு.க. தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்
சென்னை 6—7—'56 வெள்ளி

# 'பஞ்சாப் படுகொலை'

பஞ்சாப் மாநிலத்தில் ஜலந்தர் மாவட்டத்தில் உள்ள சிறிய நகரம் ஒசியார்பூர். இன்று, இந்திய அரசியலில் பிரமாதமான விவாதத்திற்குரிய நிகழ்ச்சிகளுக்குப் பிறப்பிடமாகி, பலராலும் உச்சரிக்கப்படும் 'பெருமை'யைப் பெற்றுக் கொண்டிருக்கிறது.

ஒசியார்பூரில் நடந்ததுதான் என்ன? சர்க்கார் தரப்பினர், தங்களுக்கு மட்டும் தெரிந்தால் போதும் என்பதாலோ, மக்களுக்குத் தெரிந்தால் தங்களது 'திருட்டுக் கரம்' வெளிப்பட்டு விடுமோ என்ற அச்சத்தாலோ, சட்டபூர்வமான விசாரணை ஒன்றை நடத்தி, உண்மையை ஆராய்ந்து அறிந்து கூற மறுத்து வருகிறார்கள்.

பஞ்சாப் மாநிலத்தைப் பொறுத்த புதிய அமைப்புத் திட்டத்தை, மகா பஞ்சாப் சமிதி என்ற இயக்கம், ஆதி முதலே எதிர்த்துவந்திருக்கிறது.

சீக்கிய மொழி பேசும் மாநிலம் வேண்டுமென மாஸ்டர் தாரா சிங் தலைமையில் அகாலிதளம் போராடிய காலத்தில், அந்தப் போராட்டத்திற்கு எதிராக முளைத்ததுதான் இந்த மகாபஞ்சாப் சமிதி!

'சீக்கியரல்லாத மக்களின் நலன் பேண என்று கூறி, சிறுபான்மையினரான சீக்கிய மக்களின் நலன்களைப் பறித்துக் கொண்டு மேனி வளர்க்கத் திட்டமிடுகிறார்கள் இந்தச் சமிதியினர்,' என்றே, முன்பு அகாலியரால் கூறப்பட்டது.

சீக்கிய மக்களின் கோரிக்கையின் வலுவை தெளிவாக உணர்ந்துகொண்டிருந்த காங்கிரஸ் மேலிடத்தவர், 'வட்டாரக் குழு அமைப்பு' என்ற ஒரு ஏற்பாட்டின்மூலம், தனி சீக்கிய மாநிலம் அமைவதைத் தவிர்த்து, அந்த ஏற்பாட்டிற்கு அரைகுறை மனத்துடன் சீக்கியத் தலைவர்களை ஒப்பச் செய்தனர்.

இந்த ஏற்பாட்டின் மூலம், சீக்கியர்களின் நலன்கள் பூரணமான பாதுகாப்பைப் பெறுமா என்பதை காலம்தான் காட்ட வேண்டும். ஆனால், இதன் மூலம், பஞ்சாப் மாநிலத்தில் சீக்கியரல்லாத மக்களின் நலன்கள் மட்டும் எவ்வகையாலும் பாதிக்கப்படும் என்று கூறுவதற்கு ஆதாரமே இல்லை.

உண்மை அவ்வாறிருக்க, சீக்கியரைப் பற்றிய ஒரு தவறான கருத்தை சீக்கியரல்லாத மக்களிடையே நிலவச் செய்து, தொடர்ந்து இருசாராருக்கும் பெரும்பகையையும் மூட்டிவிட்டு, அதன் மூலம் 'பெரிய இலாபம்' சம்பாதிக்க நினைப்பவர்களைப் பற்றி மக்கள் எச்சரிக்கையாக இருந்திருக்க வேண்டும்; சர்க்காரும், மிகக் கூர்மையான பார்வைகொண்டு நிகழ்ச்சிகளை கண்காணித்திருக்க வேண்டும் என்றே காலங்கடந்து கருதப்படுகிறது.

ஆனால்........?

மகாபஞ்சாப் சமிதியினர் என்ற பிற்போக்குவாதிகளின் இயக்கம், சீக்கியரல்லாதாரிடை, சீக்கியருக்கு எதிரான உணர்ச்சிகளைத் தூண்டும் வகையில் பேசியும், எழுதியும், ஆர்ப்பாட்டம் செய்துவந்திருக்கின்றது என்றே பார்வையாளர்கள் தெரிவித்திருக்கின்றனர்.

தொடர்ந்தாற்போல, இந்தச் சமிதியினர், மொழி வட்டார ஏற்பாட்டிற்கு எதிராகக் கிளர்ச்சியும், ஆர்ப்பாட்டமும் செய்து வந்திருக்கின்றனர். அப்படிப்பட்ட ஒரு ஆர்ப்பாட்டத்தின்போதுதான், 'பஞ்சாப் படுகொலை'க்கு ஒப்பான மிருக வெறிச்செயல்களில், போலீசார் ஈடுபட்டதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது.

அகாலிதளம் பற்றி சமிதியின் கருத்தைப் பற்றியோ, அல்லது, சமிதியைப் பற்றிய அகாலிதளத்தின் கருத்தைப் பற்றியோ, நமக்குக் கவலை இல்லை.

ஆனால், சமிதியினர் நடத்திய ஊர்வலம், ஆர்ப்பாட்டம் இவற்றின்போது, போலீசார் நடந்து கொண்ட முறை, ஒரு ஜனநாயக அரசியல் அமைப்பிற்கே அவப்பெயரைத் தேடித் தரத்தக்கதாக இருப்பது குறித்துத்தான், நமது கவலை.

நடைபெற்ற சம்பவங்களின் உண்மையான படப்பிடிப்பு என்ன? போலீசார், எவ்வளவுக்கெவ்வளவு தங்கள் கரங்களை நீட்டினர்? சர்க்காருக்கு நேரடியாகவோ, மறைமுகமாகவோ, இதில் எவ்வளவுக்குப் பங்கு உண்டு? சர்க்காரை அமைத்துள்ள காங்கிரசார், தங்கள் பழி வாங்கிக் கொள்ளும் சுபாவத்தை எத்தனை 'டிகிரி' கூட்டிக் கொண்டனர்?—என்பதை எல்லாம், சட்டபூர்வமான (நீதி மன்ற) விசாரணையின் மூலம் அறிய வேண்டுமென நாம் வற்புறுத்த விரும்புவதற்குக் காரணம், மக்களில், ஒருசாரார், குறிப்பிட்ட ஒரு விவகாரத்தில் தங்கள் கருத்தை எடுத்துரைக்க, ஜனநாயக வரம்பிற்குட்பட்ட அமைதியான ஆர்ப்பாட்டங்களில் ஈடுபட உரிமையுடையவரா, அல்லவா என்பதை அறிந்து கொள்வதற்குத்தான்.

சமிதியினரின் நடவடிக்கைகளின் நியாய அநியாயங்கள் பற்றிக்கூட, விவகாரத்தில் சம்பந்தப்படாத மக்களுக்குக் கவலை இல்லை. ஆனால், ஜனநாயக உரிமைகள் பற்றி, நிச்சயமாக மக்கள் கவலைப்படுகிறார்கள்.

காங்கிரஸ் மேலிடம் ஒரு கட்சிபூர்வ விசாரணைக்கு ஏற்பாடு செய்ததும், பின்னர் அந்த ஏற்பாட்டினை ரத்து செய்ததும், பஞ்சாப் முதன் மந்திரி பிடிவாதமாக விசாரணை நடத்த மறுப்பதும், மக்களுக்கு மேலும் சந்தேகங்களை வளர்க்கத்தான் உதவுமே தவிர, ஏற்கனவே ஏற்பட்ட சந்தேகத்தைப் போக்க உதவமாட்டா?

உண்மையை அறிய, நீதி மன்ற விசாரணை நடத்தி, நடைபெற்ற சம்பவங்களின் உண்மையான அடிப்படையை மக்களுக்குத் தெளிவாக்கினாலன்றி, இன்றைய காங்கிரஸ் சர்க்கார், தங்களுக்குப் பிடிக்காத கருத்துக்களுக்காகப் போராடுபவர்களை அடக்கி ஒடுக்குவதற்கு பல 'பஞ்சாப் படுகொலை'களையும் நடத்துகிற கீழ்த்தரமான—பட்சபாதமான—நாகரீகமற்ற — ஜனநாயக விரோதமான மனப்போக்கு உடையவர்கள், என்றே மக்களால் அழைக்கப்படுவர்.

## 'நாட்டிற்குத் தலைவர்களாக வழக்கறிஞர்கள் முன்வரவேண்டும்'

### நீதிபதி பஷீர் அகமது அறைகூவல்

திருநெல்வேலி—

"அரசியல், பொருளாதார சமூக வாழ்வில் வழக்கறிஞர்கள் நிகரமான பங்கு பெற்று, நாட்டிற்குச் சரியான வழிகாட்டிகளாகப் பணியாற்ற வேண்டும்."

என்று, வழக்கறிஞர் கூட்டம் ஒன்றில் பேசுகையில், சென்னை உயர்நீதி மன்ற நீதிபதி பஷீர் அகமது சையத் குறிப்பிட்டிருக்கிறார்.

"கடந்த 20 ஆண்டு காலமாக, வழக்கறிஞர்கள், பொதுவாழ்விலிருந்து ஒதுங்கி நின்று வந்திருக்கிறார்கள்; ஆனால், இப்போது அவர்கள் பொதுக் காரியங்களில் ஈடுபட வேண்டிய காலம் வந்துவிட்டது", என்றும், அவர் தெரிவித்திருக்கிறார்.

"அவர்கள், நல்ல அறிவும், தனிப் பயிற்சியும் பெற்றிருப்பதினால், பொதுமக்கள் தலைவர்களாயிருப்பதற்குத் தகுதி படைத்திருக்கிறார்கள். சுதந்திரப் போரில் ஈடுபட்டிருக்கிற வழக்கறிஞர்கள், இப்போது மீண்டும் நாட்டின் தலைமைப் பொறுப்பேற்பது கஷ்டமாயிருக்க முடியாது," என்றும் அவர் கூறியிருக்கிறார்.

## மலையேறும் குழுவில் இந்தியப் பெண்மணி!

அலகாபாத்—

இமயமலைத் தொடரில், கிரஹ்வால்—கோமான் மலைப்பகுதிகளில் மிக உயரத்தில் உள்ள பெரும் ஏரிகள் பற்றி ஆராய்ச்சி நடத்துவதற்காக அலகாபாத்தில் உள்ள இமாலய மலையேறும் சங்கத்தவர், நான்கு பேரடங்கிய குழுவினை அனுப்புகின்றனர்.

அந்தக் குழுவில், தாவர சாஸ்திரத்தில் சிறப்பான அறிவும், புகைப் படப்பிடிப்பில் மிகுந்த அனுபவமும் கொண்ட திருமதி டி. என். கிருஷ்ணசாமி என்ற ஒரு பெண்மணியும் உள்ளார்.

தென்னாட்டைச் சேர்ந்த இந்தப் பெண்மணியின் கணவரும் குழுவில் ஒரு உறுப்பினர்

இந்தக் குழு, இத்திங்கள் மத்தியில் மலையேறத் தொடங்கும் என்று கூறப்படுகிறது.

## உலகிலேயே சாகுபடிக்கு இலாயக்கான நிலம்

### இந்தியாவில்தான் அதிகமாம்

புதுடில்லி, ஜூலை 5—

பூகோள ரீதியில் பிரதேச அமைப்பைக் கவனிக்குமிடத்து, வேறு எந்த நாட்டையும்விட இந்தியாவில்தான் சாகுபடிக்கு இலாயக்கான நிலம் அதிகமிருப்பதாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

## நிறுவனங்களின் பெயர்ப் பலகைகள்

### பிரதேச மொழியிலும் இருக்க வேண்டுமென அறிவிப்பு

புதுடில்லி, ஜூலை 5—

"கம்பெனிகள் சட்டத்தின்கீழ் பதிவு செய்யப்பட்டுள்ள நிறுவனங்கள், தாங்கள் தொழில் நடத்தும் இடத்தில் தொங்கவிட வேண்டிய பெயர்—அறிவிப்புப் பலகைகள் ஆங்கில மொழியில் மட்டும் இருந்தால் போதாது—பிரதேச மொழியிலும் இருக்கவேண்டும்" என்று இந்திய சர்க்கார் வெளியிட்டுள்ள அறிக்கை ஒன்றில் குறிப்பிட்டுள்ளது.

## போர் நிறுத்தக் கோடு நெடுகிலும் படைகள்

ஜோர்டான் போர் நிறுத்தக் கோடு நெடுகிலும் இஸ்ரேல், படைகளைத் திரட்டியிருப்பதாகக் கூறப்பட்டிருக்கிறது ஜோர்டான் மன்னர் எல்லா அரபுத் தூதுவர்களையும் அழைத்துப் பேசினாரென்றும், நெருக்கடி குறித்து லெபனான் அமைச்சரவை அவசரமாகக்கூடி ஆலோசனை செய்தன வென்றும் செய்திகள் கூறுகின்றன.

## இனி மின்சார நிலையங்கள் அணுசக்தியால் இயங்கும்

### பிரிட்டனில் திட்டமிடும் நிலைபற்றி விளக்கம்

பிரிட்டன் முழுவதிலும் அணுசக்தியால் இயங்கும் மின்சார நிலையங்களை ஏற்படுத்துவதற்கு உத்தேசிக்கப்பட்டுள்ளதாம்!

காமன்வெல்த் பிரதமர்கள் மாநாட்டில், ஆக்க வேலைக்கு அணுசக்தியைப் பயன்படுத்துவது பற்றி பிரிட்டிஷ் பிரதிநிதி இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

1965-ம் ஆண்டுவாக்கில் 12-அணுசக்தி மின்சார நிலையங்கள் இயங்கும் என்றும் அப்பிரதிநிதி கூறியுள்ளார்

## சூடான் மந்திரி சபை வீழ்ச்சி!

### உம்மா கட்சித் தலைவர் பிரதமராகிறார்

கார்தூம், ஜூலை 4—

சூடான் மக்கள் சபையில், பிரதமர் இஸ்மெயில் எல் அஜுரி மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டுள்ளது

கூட்டு மந்திரி சபையின் தலைவரான அஜுரிக்கு எதிராக, மந்திரி சபையிலேயே சிலர் பதவிகளை இராஜினாமாச் செய்துவிட்டு, வாக்களித்தனராம்!

அஜுரியின் ஆதரவாளர்கள் பிளவு பட்டதினாலேயே இந்த நிலை ஏற்பட்டதாம்!

காத்மியா என்ற கோஷ்டியுடன் பிரதமர் கடந்த மாதம் விரோதித்துக் கொண்டாராம். இந்தப் பிரிவினர், மக்கள் ஜனநாயகக் கட்சி என்ற பெயரில் ஒரு கட்சியையும் உருவாக்கினராம்.

தேசிய யூனியனிஸ்டு கட்சியைச் சேர்ந்த 11 உறுப்பினர்கள், இந்தப் புதிய கட்சியோடு சேர்ந்து கொண்டனராம்; இதன் விளைவாக 97 பேர் கொண்ட பிரதிநிதித்துவ சபையில், பிரதமருக்கு 31 உறுப்பினரின் ஆதரவுமட்டுமே என்ற அளவுக்குச் சுருங்கிவிட்டதினால்தான், நம்பிக்கையில்லாத் தீர்மானம் சுலபமாக நிறைவேறியதாம்.

இப்போது தற்காப்பு இலாகா மந்திரியாக இருப்பவரும் உம்மா கட்சிச் செயலாளருமான அப்துல்லா கலீல்தான், அடுத்த பிரதமராக வரக்கூடும் என்று கூறப்படுகிறது.

## ஓசியார்பூர் சம்பவங்கள்

### விசாரணை வேண்டுவோர் வாக்குமூலம் தரவேண்டுமாம்

பஞ்சாப் முதன் மந்திரி பிரதாப்சிங் கெய்ரான் கூற்று

சந்திகர், ஜூலை 4—

"கடந்த ஜூன் 17-ந் தேதியன்று ஓசியார்பூரில் நடைபெற்ற சம்பவங்களின்போது பெண்கள் அவமானத்திற்கு ஆளாக்கப்பட்டனர் என்று கூறி, சட்டபூர்வமான விசாரணை வேண்டும் என்று கோரப்படுகிறது. இந்தக் குற்றச்சாட்டுகளைக் கூறுவோர், அவற்றை நிரூபிப்பதற்காக, எழுத்து மூலமாக, வாக்குமூலங்களைத் தாக்கல் செய்யட்டும்,"

என்று பஞ்சாப் முதன் மந்திரி சர்தார் பிரதாப் சிங் கெய்ரான் தெரிவித்திருக்கிறார்.

இதற்கிடையில், மகாபஞ்சாப் சமிதி ஐந்து பேரடங்கிய குழு ஒன்றை நியமித்து, சம்பவங்கள் பற்றி விசாரணை நடத்துமாறு கோரியுள்ளது என்றும் தெரிவிக்கப்படுகிறது.

## சிறிய இயந்திரப் படகுகள் கட்ட முயற்சி!

### கொச்சியில் தனியார் துறைக்கு இந்திய சர்க்கார் ஆதரவு தரும்

எர்ணாகுளம், ஜூலை 5—

கடற்கரைப் போக்கு-வரத்திற்கு தகுதியானதாக 500-லிருந்து 1000 டன் சரக்குகளை ஏற்றிச் செல்லும் சிறிய இயந்திரப் படகுகளை நிர்மாணிப்பதற்கான கப்பல் துறை ஒன்றை கொச்சியில் கட்டுவதற்குத் தனியார் துறையை ஆதரிப்பதென இந்திய சர்க்கார் முடிவு செய்திருக்கிறதாம்.

இந்தத் திட்டத்தை ஏற்றுக் கொள்ளும் தனியார் நிறுவனத்திற்குத் தொழில் நிதி கார்ப்பரேஷன் மூலம் மத்திய சர்க்கார் கடன் உதவியும், கப்பல் துறைக்கான நிலம் போன்ற இதர வசதிகளும் கிடைக்கும்.

இத்திட்டத்தை ஏற்று நடத்த திரு-கொச்சியைச் சேர்ந்த நிறுவனம் எதுவும் முன்வராமல்போகுமானால், வெளி மாநிலங்களிலிருந்து, தனியார் நிறுவனம் ஒன்றை இந்திய சர்க்காரே தேர்ந்தெடுத்து, திட்டத்தை அந்நிறுவனத்திடம் ஒப்படைத்துவிடும் எனத் தெரிகிறது.

## ஆரிய கலாச்சார தூதுக் குழு

### ரஷ்யா முதலிய நாடுகளுக்குச் செல்கிறது

புதுடில்லி, ஜூலை 4—

ரஷ்யா, செக்கோசுலோவேக்கியா, பல்கேரியா, ருமேனியா, போலந்து, யூகோசுலேவியா, அங்கேரி ஆகிய நாடுகளின் அழைப்பின் பேரில், இசைவாணர்கள், நடனமணிகள் ஆகியோரடங்கிய கலாச்சாரத் தூதுக் குழு ஒன்று இந்தியாவிலிருந்து, இத்திங்கள் 10-ந் தேதியன்று புறப்பட்டுச் செல்லும் என்று தெரியவருகிறது.

தூதுக் குழுவிற்கு வெளிவிவகார இலாகா உதவி மந்திரி அனில் கே. சந்தா தலைமை தாங்கிச் செல்வார் என்றும், தூதுக்குழுவில் செல்லும் சுமார் 30 பேரில், மிகப் பெரும் பகுதியினர் வடநாட்டவர்தான் என்றும் தெரியவருகிறது.

## ரஷ்ய ராணுவ அதிகாரி வெளியேற்றப்பட்டார்!

### அமெரிக்காவில் நடவடிக்கை

வாஷிங்டனில் ரஷ்ய தூதுவராலயத்தைச் சேர்ந்த உதவி இராணுவக் காரியதரிசி கர்னல் இவான் புடசிகாவ், அமெரிக்காவிலிருந்து வெளியேற்றப்பட்டிருப்பதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

அமெரிக்காவில் தொடர்ந்து இருப்பதற்கு ஏற்றவகையில் இல்லாத நடவடிக்கைகளில் அவர் ஈடுபட்டதாகக் குற்றம் சாட்டப்பட்டிருக்கிறாராம்.



# அநீதியின் [illegible]ங்கம் குடியரசுத் தலைவர்?

## மராட்டியர்கட்கு சமாதான போதனை புரிகிறார்!

### பலாத்காரம் பரிகாரம் தேடித்தராதாம்!

நல்லெண்ணத்துடனேயே குழு நியமிக்கப்பட்டதாம்!

அவுரங்காபாத், ஜூலை 4—

மாநில புது அமைப்பு விவகாரம் குறித்து குடியரசுத் தலைவர் கருத்து வழங்கியுள்ளார்.

"தொல்லை மிகுந்த மாநில புது அமைப்பு விவகாரம் குறித்து ஆராய்ந்து, சிபாரிசுகள் வழங்குமாறு மிகுந்த நல்லெண்ணத்துடன், சர்க்கார் ஒரு உயர்தர அதிகாரம் படைத்த குழுவை நியமித்தது—அந்தக் குழுவின் சிபாரிசுகள் மக்களால் ஏற்றுக் கொள்ளப்படும் என்ற நம்பிக்கையில்! ஆனால், துரதிருஷ்டவசமாக அப்படி நடைபெறவில்லை. குழுவின் முடிவுகளில் பெரும்பாலானவை தொடர்புடைய மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தாலும், இரண்டொரு பிரதேசங்களில் முடிவுகள் குறித்து கருத்து வேற்றுமை ஏற்பட்டது.

"இந்த அவுரங்காபாத், மராத்வாடாவின் இதர பகுதிகளுடன் இணையவிருக்கிற மராட்டிய மாநிலம் பற்றியும் கருத்துவேறுபாடு எழுந்தது; இதுபோன்ற ஒரு விவகாரத்தில் ஏற்படும் தகராறினைத் தீர்க்க, அமைதியான சூழ்நிலையில், பரஸ்பரப் பேச்சுவார்த்தைகள் மூலம் விஷயங்களைப் புரிந்துகொண்டு முடிவு காண முயலுவதே சிறந்த வழியாக இருக்க முடியும். அதை விட்டு, பலாத்காரத்தில் ஈடுபடுவது சரியானது அல்ல.

"வெள்ளையரை எதிர்த்து, சுதந்திரத்திற்காக நாம் போராடிய நீண்ட காலத்தில்கூட நாம் பலாத்காரத்தை மேற்கொள்ளவில்லை என்ற நிலையிருக்கும் போது, இன்று, நமது நாட்டு மக்களில் எந்த ஒரு சாராருக்கும் பலாத்காரத்தைக் கையாளுவதற்கு எந்த நியாயமும் கிடையாது.

"எனவே, ஐதராபாத்தில் உள்ள மராத்தி பேசும் மக்கள், பலாத்காரத்தைக் கைவிட்டு, மாநில புது அமைப்பு விவகாரத்தை—குறிப்பாக மராட்டிய மாநிலம் அமைப்பதை, விருப்பு வெறுப்பின்றி பரிசீலனை செய்யுமாறு கேட்டுக்கொள்கிறேன்,"

என்று, குடியரசுத் தலைவர், அவுரங்காபாத் நகரசபை தனக்களித்த வரவேற்பிற்குப் பதில் அளிக்கையில், குறிப்பிட்டிருக்கிறார்.

## தானே சுழலும் குடியிருப்பு அறை

அமெரிக்காவிலுள்ள கொலம்பஸ் (ஓகியோ) அருகில் ஒரு விசித்திரமான வீடு கட்டப்பட்டுள்ளது, அவ்வீட்டின் இரண்டாம் மாடியின் குடியிருக்கும் அறை சுழலக்கூடியதாம்! எந்தத் திக்கிலும் அதைத் திருப்பி வைத்துக் கொள்ளலாமாம்! வெய்யில் படாதவாறு, சூரியன் செல்வதற்கேற்ப, அந்த அறை தானே இயங்கிக் கொள்ளுமாம்!

18-அடி அகலமும் 18-அடி நீளமும் உள்ள அந்த மாடியின் அறையை மின்சார மோட்டார் ஒன்று சுழற்றுவிக்கிறதாம்!

சுழலக்கூடிய அறையாதலால், அந்த அறையில் குடியிருப்போர் தம்மைச் சுற்றி நான்கு திக்குகளிலுமுள்ளவை அனைத்தையும் பார்க்க இயலுமாம்!

## காரணம் தெரியுமா?

"பெண்களைவிட ஆண்களுக்கு அதிகமாக வழுக்கை ஏற்படக் காரணம், அவர்கள் அதிகமாக தம் மூளையைச் செலவிடுவதால்தான்; ஆனால், வரவர அதிகமாகப் பெண்கள் வேலைபார்க்க முற்படுவதால் கொஞ்ச காலத்தில் ஆண்களிடையே காணப்படுவதுபோலவே பெண்களுக்கும் அதிக வழுக்கை ஏற்படலாம். ஆனால், உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் இசை வல்லுநர்கள், நடிகர்கள் போன்ற கலைஞர்களுக்கு அதிக வழுக்கை ஏற்படுவதில்லை," என்று, பிரிட்டிஷ் டாக்டர் ஒருவர் குறிப்பிட்டுள்ளார்.

## 'கண் துடைப்பு' அல்லவே!

இலண்டன், ஜூலை 4—

நீர்வளிக் குண்டு சோதனைகளை, பசிபிகில் பிரிட்டன் நடத்தியதால், அங்குள்ள எந்தத் தீவும் மக்கள் வாழ்வதற்கு இலாயக்கற்றதாக இல்லையென்றும், இப் பரிசோதனைக்காக அப்பகுதியிலிருந்து எம்மக்களும் நிரந்தரமாக வெளியேற்றப்படவில்லையென்றும் காமன்ஸ் சபையில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

## அணுகுண்டு வெடித்ததால் ஏற்பட்ட எதிரொலி!

இலண்டன், ஜூலை 4—

'சென்ற உலகப் போரில், அணுகுண்டு வீசப்பட்டு வெடிக்கப்பட்டதிலிருந்து, மனித வர்க்கத்தின் விவேகம் அதிகரித்து வருகிறதென்று கூறப்படும் பொதுவான கருத்தில் விவேகம் இருக்கிறதா?'—என்று, ஒரு பிரிட்டிஷ் மனோதத்துவ நிபுணர் சோதனை நடத்திப் பார்க்கப் போகிறாராம்!

## கீழ்ப்பாக்கம் தண்ணீர் விநியோக நிலையம்

சென்னை, ஜூலை 2—

கீழ்ப்பாக்கம் தண்ணீர் விநியோக நிலையத்தை அபிவிருத்தி செய்வதற்காக, தேவையான நிலங்களை வாங்க ரூ. 4,76,500 செலவில் நகரசபை தாக்கல் செய்த திருத்தப்பட்ட திட்டத்தை சென்னை சர்க்கார் ஏற்றுக்கொண்டுவிட்டதாம்.

## கறைகளும் குறைகளும் கலைஞர்களிடத்தில் மட்டுமா?

"மனித இனத்தின் பலவீனம் காரணமாக வாழ்க்கையில் கறைகளும், குறைகளும் எல்லாத் துறைகளில் உள்ளவர்களிடமும் காணப்படுகின்றன; ஆயினும், கலைஞர்களின் தனிப்பட்ட வாழ்க்கையில் ஏற்படுவதாகக் கருதப்படும் குறைகளைமட்டுமே பெரிதாகச் சுட்டிக்காட்டி, அவர்கள்மீது களங்கம் கற்பிக்க முற்படுவது கொஞ்சமும் நியாயமல்ல! அத்தகைய கறைகளையும், குறைகளையும் ஒன்றுக்குப் பத்தாகச் சுட்டிக் காண்பிப்பதால் என்ன பயன்?"

என்று, பல இலட்சியப் படங்களை உருவாக்கி வெற்றி கண்ட டைரக்டர் வி. சாந்தாராம் அவர்கள், சென்னையில் குறிப்பிட்டுள்ளார்.

## 265 அங்குல மழை!

### ஒரே மாதத்தில் பெய்ததாம்!

ஷில்லாங், ஜூலை 5—

இதுவரையில் உலகிலேயே அதிக மழை பெய்யும் இடம் சிராபுஞ்சிதான் என்று கருதப்பட்டு வந்தது; ஆனால், இதையும் மிஞ்சக்கூடிய இடம் இப்போது புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது; அது, மாசின்ராம் என்னும் ஒரு மலைவாழ் மக்கள் கிராமம்; ஷில்லாங்கிலிருந்து 30 மைல் தூரத்தில் அக்கிராமம் இருக்கிறது.

சென்ற ஆண்டில், ஒரே மாதத்தில் அங்கு 265·40 அங்குல மழை பெய்திருக்கிறதாம். இவ்வாண்டின் முதல் 6 மாதங்களில் மொத்தம் 449 83 அங்குலம் பெய்திருக்கிறதாம். (சிராபுஞ்சி 365-66 அங்குலம்).

## கிராமக் கைத்தொழில்கள் அபிவிருத்திக்கு நிதி உதவி

புதுடில்லி, ஜூலை 4—

உயர்ரகக் கைத் தயாரிப்புக் காகிதம், வெல்லம் ஆகிய தொழில்களின் அபிவிருத்திக்காக, அகில இந்திய கதர்-கிராமக் கைத்தொழில் போர்டுக்கும், அநேக மாநிலங்களுக்கும், இந்திய சர்க்கார், கடன் தொகைகளாகவும் மானியங்களாகவும் மொத்தம் ரூ. 18,48,000-க்கு மேல் அனுமதித்துள்ளனர்.

## அபிவிருத்தி வேலைகளுக்கு ஒதுக்கிய பணத்தில் ரூ. 10-இலட்சம் திருப்பப்படுகிறதாம்!

### மக்களின் ஒத்துழைப்புப் பற்றி கலெக்டர் குறிப்பு

விழுப்புரம், ஜூலை 3—

"முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் ஸ்தல அபிவிருத்தி வேலைகளுக்கு தென் ஆற்காடு மாவட்டத்திற்கு ரூ 22 இலட்சம் ஒதுக்கப்பட்டிருந்த போதிலும், வேலைகள் போதிய அளவு நடைபெறாமையால், அதில் ரூ 10 இலட்சம் திருப்பித்தரவேண்டியிருக்கும்; மக்களின் ஒத்துழைப்பு இருந்தால்தான் அபிவிருத்தி வேலைகள் நிரம்பட நடக்க இயலும்,"

என்று, கலெக்டர் ஏ. குன்ஹாமத் குறிப்பிட்டுள்ளார்.

## இந்தி மொழியை வளர்க்க டில்லியின் புதிய திட்டம்!

### சிறந்த 16 புத்தகங்களுக்கு ரூ. 2,000 வீதம் பரிசு அளிக்கப்படுமாம்

புதுடில்லி, ஜூலை 4—

ஒவ்வொன்றும் ரூ. 2,000 வீதம் 16 பரிசுகள்—இந்திப் புத்தகங்களுக்காக வழங்கப்படுமென டில்லி அறிவிக்கிறது.

1955 ஜனவரி முதல் தேதி முதல் டிசம்பர் 31-ந் தேதிக்குள் வெளிவந்த சிறந்த இந்தி மொழிப் புத்தகங்களுக்கு இவை வழங்கப்படுமாம்.

இந்தி மொழியையும், இலக்கியத்தையும் வளப்படுத்த—ஊக்கமூட்டுவதற்காகவே இந்தப் பரிசுத் திட்டமாம்.

இந்தப் புத்தகங்கள் சுயமாக இந்தியிலேயே எழுதப்பட்டவையாயுமிருக்கலாமாம்! பிறமொழிகளிலிருந்து பெயர்த்து எழுதியவையாயுமிருக்கலாமாம்!

நான்கு பகுதிகளாகப் பிரித்து, இந்த 16 பரிசுகளும் வழங்கப்படுகின்றனவாம்!

## குடியானவர்களுக்குக் கடன் வசதி செய்து தர!

### 10,400 - கூட்டுறவு சங்கங்கள் நிறுவுவதற்குத் திட்டம்

முசௌரி, ஜூலை 4—

விவசாய உற்பத்தியைப் பெருக்கவும், குடியானவர்களுக்குத் தக்க சமயத்தில் போதுமான கடன் சுலபமாகக் கிடைக்கவும் 10,400 - பெரிய கூட்டுறவு கடன் உதவி சங்கங்களை ஏற்படுத்தும் திட்டத்தை துரிதப்படுத்துமாறு கோரி மாநிலக் கூட்டுறவு இலாகா மந்திரிகள் மாநாடு தீர்மானம் நிறைவேற்றியது.

1954-55-ல் இந்திய சணல் பொருள்களின் ஏற்றுமதி 8,51,000 டன்னுக உச்ச அளவை எட்டியது; 1953-54-ல் ஏற்றுமதி 7,92,000 டன்,

## புதிய இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன்

### தலைமை நிலையம் பம்பாயில் வேண்டுமெனக் கோரிக்கை

சென்னை, ஜூலை 4—

"அமைக்க உத்தேசிக்கப்பட்டிருக்கும் ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன், பம்பாயைத் தலைமைப்பீடமாகக் கொள்ள வேண்டும் என்று கோருவது, எதிர்க்க முடியாத ஒன்றாகும்.

"இந்தியாவில் நடைபெறும் இன்ஷ்யூரன்ஸ் தொழிலில் 50 சதவிகிதம்வரை பம்பாயில்தான் நடைபெறுகிறது. வேறு எல்லாவகை இன்ஷ்யூரன்ஸ் போலவே ஆயுள் இன்ஷ்யூரன்சிலும் பம்பாய் பெற்றுள்ள சிறந்த அனுபவம், இந்தத் தொழிலை மேலும் சிறப்பான வகையில்விருத்தியடையச்செய்ய வழிகாட்டுவதாக அமையும்,"

என்று, இந்திய வர்த்தக தொழில் கழகங்களின் கூட்டுச் சங்கத் துணைத் தலைவரான பாபுபாய் எம். சினாய் என்பார் இங்கு பேசியிருக்கிறார்.

'இன்ஷ்யூரன்சைப் பொறுத்த பல தலைமை நிலையங்கள் பம்பாயில்தான் இருக்கின்றன. உதாரணமாக ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் நிறுவனங்கள் சங்கம், இந்திய இன்ஷ்யூரன்ஸ் சங்கம் இவை எல்லாம் இங்குதான் உள்ளன," என்றும் அவர் குறிப்பிட்டிருக்கிறாராம்.

## சென்னை சர்க்கார் மீண்டும் கடன் எழுப்பும்

சென்னை, ஜூலை 4—

இந்த ஆண்டிற்கான சென்னை சர்க்காரின் கடன் திட்டம் பற்றி ரிசர்வ் பாங்கியுடன் விவாதிப்பதற்காக சென்னை மாநில சர்க்காரின் நிதி இலாகா செயலாளரான டி. ஏ. வர்கீஸ் பம்பாய் செல்கிறார் என்று தெரிய வருகிறது.

சென்ற ஆண்டில் சர்க்கார், ரூ. 10 கோடி கடன் எழுப்பினர்; அதற்கு ரூ. 14 கோடிவரை வசூலாயிற்று என்பது நினைவிலிருக்கலாம்.

சர்க்கார் இப்போது, கிராம சேமிப்பின்மீது கண்ணோட்டம் செலுத்துவதாகக் கூறப்படுகிறது.

## சாதி முறைக் கேடுகளைக் களைய கலப்புத் திருமண இயக்கம்!

கலப்புத் திருமண இயக்கம் ஒன்றை அகில இந்திய ரீதியில் நிறுவுவது என்றும், கான்பூரை அந்த இயக்கத்திற்குத் தலைமைப் பீடமாகக் கொள்வது என்றும் முடிவாகியிருக்கிறதாம்.

இந்த இயக்கத்தின் செயலாளரான கே. சி. மதூர் என்பார் இத்தகவலை வெளியிட்டிருக்கிறார்.

சாதிமுறைக் கேடுகளை அகற்ற இந்த கலப்புத் திருமணம் பயன்படும் என்றும் அவர் கூறியிருக்கிறார்.

இந்த இயக்கம் வரதட்சிணை தரும் முறை, கொள்ளைச் செலவில் திருமணம் நடத்தும் பழக்கம் ஆகியவற்றை ஒழிக்கப் பாடுபடுவதுடன், விதவை மணம் முதலியனவற்றிற்காகவும் பாடுபடுமாம்.

தகுந்த துணை தேடுபவர்களுக்கு இந்த இயக்கம் உதவும் என்றும், இயக்கத்தில் ஆண்—பெண் என்று இருபாலாரும் உறுப்பினர்களாக முடியும் என்றும் கூறப்பட்டுள்ளது.

## செங்கற்பட்டு மாவட்ட அபிவிருத்தி வேலைகள்

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் செங்கற்பட்டு மாவட்ட அபிவிருத்தி வேலைகளுக்கு ரூ. 20 கோடி ஒதுக்கப்பட்டிருப்பதாக தாசில்தார் என். இராமசாமி கூறியுள்ளார்.

## அறுபதாண்டு நிறைவுவிழா

1-7-56-ல் வாலாஜாபாத் இந்துமத பாடசாலையில் திரு வே. வேதாசல (முதலியார்) அறுபதாண்டு நிறைவு விழா, செங்கற்பட்டு மாவட்ட அதிகாரி திரு. வெங்கடேசன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது.

திருவாளர்கள் டி. சண்முகம் எம்.எல்.ஏ., கோ. மொ. ஜனார்த்தனம், ஏ. எஸ். ஜான்சன், தட்சணாமூர்த்தி, பி. சிவ சப்புத் (தேவர்) சாமிவேலு (முதலியார்) ஆகியோர் பாராட்டுரை வழங்ினர். தோழர் வா. தி. மாசிலாமணி (முதலியார்) நன்றி நவின்றார்.

வாலாஜாபாத் இந்துமத பாடசாலைக்கு இலட்சம் ரூபாய் செலவில் உணவுக்கூடம் நிறுவிக்கொடுத்த திரு. எம். வேதாசலம் (முதலியார்) அவர்களின் அறுபதாண்டு நிறைவு விழாவை பாடசாலையில் கொண்டாடியபோது, எடுத்தபடம்; திரு. டி. சண்முகம் எம் எல்.ஏ. பேசிக் கொண்டிருக்கிறார்.

# 'இந்தியா கம்யூனிஸ்டு நாடாக மாருது'

## அமெரிக்க ஆலோசகர் கருத்து!

ஆல்பனி(நியூயார்க்), ஜூலை 3—

"இப்போதுள்ள ஆட்சி நீடிக்குமானுல், இந்தியா கம்யூனிஸ்டு நாடாக மாறுவதற்குக் கிஞ்சிற்றும் சந்தர்ப்பமே இல்லை,"

என்று இந்திய சர்க்காருக்கு விசேட ஆலோசகராயிருந்துவிட்டு அமெரிக்கா திரும்பியுள்ள ஒருவர் கூறியிருக்கிருர் எனத் தெரிகிறது.

பால் எச். ஆப் லெபி என்ற அந்த ஆலோசகர், இந்தியாவில் ஒரு காங்கிரஸ் கட்சிப் பிரமுகர், பிரதமர் நேரு, சர்க்கார் அதிகாரிகள் ஆகியோரை எல்லாம் சந்தித்த பின்னரே இந்தக் கருத்தை உருவாக்கியதாகவும் கூறியிருக்கிருர்.

'இந்தியாவிற்கு அமெரிக்கா இன்னும் அதிகமான உதவியளிக்க வேண்டும்' என்றும் அவர் கூறினுர்.

கம்யூனிஸ்டுகளைப் பற்றிய இந்திய சர்க்காரின் கொள்கை மிக உறுதியானது; ஆனுல், அவர்களை தியாகிகளாக்கும் எண்ணம் சர்க்காருக்கு இல்லை என்றும் அவர் தெரிவித்தாராம்.

"இந்தியாவின் 'நடு நிலை'மைக் கொள்கை, காந்தியாரின் அகிம்சாக் கொள்கையிலிருந்து வேர் விட்டதாகும்" என்றும் அவர் தகவல் தந்திருக்கிருராம்.

தான் இந்தியாவின் தொழில்கள் பற்றித் தந்துள்ள அறிக்கை இந்திய சர்க்காரால் வெளியிடப்படும் என்றும் அவர் கூறியிருக்கிருர்.

---

மொழிக்கும்-மதத்திற்கும் தொடர்பு

## கற்பிப்பது கூடாது'

டாக்டர் இலட்சுமணசாமி கருத்து

சென்னை, ஜூலை 5—

'மொழி விவகாரத்தைப் பொறுத்து, இது தனி நபர்களின் விருப்பத்திற்கு விடப்படவேண்டும் ஒரு குறிப்பிட்ட மொழியை ஒருவர் கற்றுக்கொள்ள விரும்பினுல், அதற்குத் தடையேதும் இருத்தலாகாது. சில மொழிகள், மக்களின் மதவாழ்வை ஓரளவு பொறுத்ததாக இருக்கின்றன என்பதும் உண்மைதான்; அதனுலேயே அந்த மொழிகள், குறிப்பிட்ட அந்த மதத்தைப் பின்பற்றுகிறவர்களுக்கு மட்டுமே என்று கட்டுப்படுத்தத் தேவை இல்லை.

"இந்துக்களாயிருப்போர் உருதுமொழியில் புலவர்களாகவும், முஸ்லீம்களாயிருப்போர் சவமொழியில் புலவர்களாகவும் இருப்பது உண்டு. ஒரு மொழியை, ஒரு குறிப்பிட்ட தத்துவம்—மதம்—சாதி இவற்றுடன் ஒட்டுச்சேர்த்துப் பேசுவது தவறு. சவமொழியில் மிகப்பெரும் புலவர்கள் இன்னும் ஐரோப்பிய நாடுகளில்தான் உள்ளனர்; சவ மொழி வளர்ச்சிக்கு அவர்கள் செய்துள்ளசேவை பலரும் பாராட்டுதற்குரிய ஒன்றாகும்,"

என்று டாக்டர் ஏ. இலட்சுமணசாமி அவர்கள், உருது சங்கம் ஒன்றில் பேசும்போது குறிப்பிட்டிருக்கிருர்.

மேலும் பேசுகையில் அவர், 'சுதந்தரம் பெற்ற பிறகு ஆங்கிலத்தில் பேசுவது கூடாது என்று கூறப்படுகிறது; அது தவறு. இந்த எண்ணம் நமது முன்னேற்றத்திற்கு உதவக்கூடியதல்ல' என்றும் குறிப்பிட்டிருக்கிருர்.

---

# சென்னையில் சேரிகள் சீர்திருத்தம்

சர்க்கார் அவசர உத்தரவு

சென்னை, ஜூலை 4—

சென்னையில் கூவத்திற்கு தெற்கே மிகவும் மோசமான நிலைமையில் உள்ள 60 சேரிகளை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் சீர்திருத்துவதற்காக நகர் அபிவிருத்தி டிரஸ்ட் பொறுக்கி எடுத்து, அவற்றைச் சீர்திருத்த மொத்தம் ரூ $1\frac{1}{2}$ கோடியில் ஒரு திட்டம் தயாரித்தது; இந்தச் செலவில் பாதியை மத்திய சர்க்கார் கடனுகவும்—கால் பாகத்தை மானியமாகவும், மற்ற கால் பாகத்தை மாநில சர்க்கார் கடனுகவும் கொடுப்பதென ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது.

இதைத் தொடர்ந்து கூவத்திற்குத் தெற்கே சர்க்கார் நிலங்களில் உள்ள 10 சேரிகளை 1956—57-லேயே சீர்திருத்த விவரமான திட்டம் தயாரிக்குமாறு நகர அபிவிருத்தி டிரஸ்ட்டுக்கு மாநில சர்க்காரிடமிருந்து அவசர உத்தரவு வந்துள்ளது.

---

# கழகக் கூட்டம்

★

பந்தநல்லூர்:

9—7—56 மாலை 5 மணிக்கு

தலைவர் :

என். அசோகன்

பேசுவோர்:

ஏ. வி. பி. ஆசைத்தம்பி
கே. கே. நீலமேகம்
என். கிட்டப்பா
பொ. தருமன்
ம. கோ. மணி

★

பாண்டமங்கலம்

சோமசுந்திரம் திடலில்

8—7—56 மாலை 6 மணிக்கு

தலைவர் :

கே. சின்னகுட்டி

பேசுவோர் :

டி. பி. மூர்த்தி
வி. இரத்தினவேலு
வி. ஏ. இராமநாதன்

★

அம்மையப்பன்

8—7—56 மாலை 6 மணிக்கு

தி. மு கழக 6-வது ஆண்டு விழா

பேசுவோர் :

சத்தியவாணிமுத்து
ஏ. நடராசன்

---

### மாயூரம் நகர தி. மு. கழகச் செயற்குழுக் கூட்டம்

8—7—56 இரவு 8-30 மணிக்கு மாயூரம் நடராசன் நினைவு வாசகசாலையில், கழகச் செயற்குழுக் கூட்டம் நடைபெறும். அதுபோது கழக வரவு-செலவு, மும்முனைப் போராட்ட நினைவுநாள், நகரில் கழகக் கொடிகள் ஏற்றுவித்தல், ஆகியவை பற்றி முடிவு செய்யப்படும்.

---

### சென்னைத் தமிழாசிரியர் கழகம்

சென்னை—மாணவர் மனறக் கிளை நிலையமாகிய ஆயலூர் முத்தையா முதலித் தெருவில உள்ள 34-ம் எண்ணுள்ள இல்லின் மூன்றும் மாடியில், 8—7—57 மாலை 4-மணிக்கு பேராசிரியர் மயிலை சிவமுத்து தலைமையில் சென்னைத் தமிழாசிரியர் கழகப் பொதுக்கூட்டம் நிகழும்.

---

# எஸ். வி. லிங்கம்

உடல் நிலை

திருச்சி, ஜூலை 6—

தோழர் எஸ். வி. லிங்கம் அவர்கள் உடல்நிலை பாதிக்கப்பட்டதின் காரணமாக, அரசாங்க மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டுள்ளார். நாளை இரணச் சிகிச்சை நடைபெறும். இன்னும் இரண்டு வாரங்கள் இங்கேயே இருக்க வேண்டுமென டாக்டர்கள் கூறியுள்ளனர்.

---

## சென்னை நகர மாணவர்கட்கு:

"நடைமுறை ஆண்டில், சென்னை நகர தி. மு. க.—மாணவர் கிளையை நல்ல முறையில் இயக்குவதற்காக ஆய்வுக் கூட்டம் ஒன்று, சென்னை-இராயபுரம், 'அறிவக'த்தில், 8—7—56 காலை நடைபெறவிருக்கின்றது.

"சென்னை நகர தி. மு. க.—மாணவர் கிளையின் பணியில் பற்றுடைய மாணவர்கள் அனைவரும் அன்று வருகை தருமாறு பணிவன்புடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

"கல்லூரிகள், உயர்நிலைப் பள்ளிகள் அனைத்தும் குறைந்தது 2 பிரதிநிதிகளை அனுப்பிவைக்க வேண்டுகிறேன்.

"சென்னை நகரிலுள்ள அமைப்புக் குழு உறுப்பினர்கள் சென்னை நகரைச் சார்ந்த கிளைக் கழக நிர்வாகிகள் ஆகியவர்களைத் தவருமல் கலந்துக்கொள்ள பணிவோடு கேட்டுக்கொள்ளுகிறேன்,"

என்று, தி. மு. க.—மாநில மாணவர் கிளை அமைப்பாளர் தோழர் டி. கே. பொன்னுவேலு அறிவிக்கிருர்.

---

### சென்னை 46-வது வட்ட தி. மு. க. பொதுக்கூட்டம்

9—7—56 மாலை 6 மணியளவில், சென்னை—ஆள்வார்பேட்டையில் (திருவள்ளுவர் சாலை'க்கு அருகாமையிலுள்ள திடலில்), தோழர் இரா. அசமழகன் தலைமையில், மேற்படி வட்ட தி. மு. கழகச் சார்பில் பொதுக்கூட்டம் நடைபெறும். தோழர்கள் ஈ. வெ. கி. சம்பத், கண்ணதாசன், இளம்பரிதி ஆகியோர் பேசுவர். தோழியர் எஸ். சாந்தகுமாரி இன்னிசை வழங்குவார்.

---

### சென்னை—வண்ணை இளைஞர் முன்னேற்ற மன்றம்

8—7—56 காலை 8 மணியளவில், சென்னை—வண்ணை, மணிகண்ட முதலி தெரு மன்ற அறையில், உறுப்பினர்கள் கூட்டம நடைபெறும். அதுபோது மன்ற வரவு-செலவுகள் பரிசீலனை செய்யப்படும்; துணைச் செயலாளர் தேர்வு நடைபெறும்.

---

### சென்னை—வண்ணை இளங்கோ கலைமன்றம்

8—7—56 காலை 8 மணிக்கு, திரு. சி. அரங்கசாமி தலைமையில், 'பண்டாரநாயகாவும் — பாராண்டோரும்' என்ற தலைப்பில், தோழர்கள் பலர் சொற்பொழிவாற்றுவா.

---

### ஜூனை நகர இளைஞர் கழகம்

7—7—56 மாலை 6-30 மணிக்கு எண் 10, மாணிக்கசெட்டித் தெரு. கழக மனையில், தோழர் பி. ஜி இராசகோபாலன் 'மணிமேகலை' என்ற தலைப்பில் பேசுவார்.

---

### திருக்குறள் வகுப்பு

7—7—56 இரவு 7 மணிக்கு சென்னை—இராயபுரம் இலக்கிய மன்றச் சார்பில், திருவேங்கட நாயக்கன் தெரு, 8-ம் எண்ணுள்ள இல்லத்தில் திரு. அ. ஞானசுந்தரம் குறளில் 'நீத்தார் பெருமை' எனும் பொருள் குறித்துப் பேசுவார்.

---

# மறுப்பு

'நம் நாடு' அலுவலகத்தில் பணியாற்றி வந்த தோழர் துரைசாமி என்ற தொழிலாளர் தொடர்ந்து கட்டுப்பாட்டையும், ஒழுங்கையும் மீறினுர் என்ற குற்றத்திற்காக வேலையிலிருந்து விலக்கப்பட்டார் என்ற நிகழ்ச்சியை, 'ஜனசக்தி'—தனது 24—6—56 இதழில், இல்லாததும், பொல்லாததும் புனைந்து, திரித்துச் செய்தியாக வெளியிட்டிருக்கிறது.

லேபர் ஆபீசர் முன்னிலையில் வழக்கு நடந்ததாகவும், அத்தொழிலாளரை விலக்கியது அநியாயமென்று அவர் தீர்ப்புக் கூறியதாகவும், நஷ்ட ஈடு கொடுக்க முடிவு ஏற்பட்டதாகவும் 'ஜனசக்தி'யின் அச்செய்தி கூறுகிறது. அவ்விதம் வழக்கு ஏதுவும் நடைபெறவுமில்லை—தீர்ப்புக் கூறப்படவுமில்லை.

அத்தொழிலாளர் விலக்கப்பட்டபோது முறைப்படி, அலுவலகம், கொடுக்கயிருந்த சலுகைகளைப் பெருமல், லேபர் ஆபீசரை அவர் அணுகினுர். பின்னர், லேபர் ஆபீசர் அதே சலுகைகளை அத்தொழிலாளருக்குக் கொடுக்கச் செய்து சமரச முடிவு ஏற்படுத்தினுர்.

—நிர்வாகி: 'நம் நாடு'

---

### இலக்கியச் சொற்பொழிவு

சென்னை—இராயபுரம் இலக்கிய மன்றச் சார்பில், பனைமரத் தொட்டி, அட்டபாளையம் பஜனைக் கோவிலில் 8—7—56 காலை 9-30 மணியளவில் ஓர் இலக்கியச் சொற்பொழிவுக் கூட்டம் திரு அ முனுசுவாமி தலைமையில் நடைபெறும். திரு. சாமிசிதம்பரனுர், 'இலக்கியத்தில் கருத்துப் புரட்சி' என்ற தலைப்பிலும், திரு. எஸ். ஜி. விஞயகமூர்த்தி 'திட்டமிடுதல்' என்ற தலைப்பிலும் பேசுவர்.

---

### சொற்பயிற்சிக் கூட்டம்

8—7—56 காலை 10 மணிக்கு, பெங்களூர்—அலசூர் முயற்சி மன்றத்தில், 'தலைவரும்-தொண்டரும்' எனும் தலைப்பில், தோழர் வேலரசு தலைமையில் சொற்பயிற்சிக் கூட்டம் நடைபெறும்.

---

### திருமணங்கள்

8—7—56 காலை 9 மணியளவில், சென்னை - தண்டையார் பேட்டை, நாராயணசாமி தேசிகர் மண்டபத்தில் (போலீஸ் ஸ்டேஷன் அருகாமையில்), தோழர் ம. மோகனன் — தோழியர் சாரதா திருமணம், பேராசிரியர் க. அன்பழகன் தலைமையில் நடைபெறும். தோழர்கள் கண்ணதாசன், க. அறிவழகன் வாழ்த்துரை வழங்குவர்.

* * *

9—7—56 காலை 11 மணியளவில், திருவம்பால்லூரில், தோழர் என். வீராசாமி — தோழியர் யசோதை திருமணம் தோழர் கே. கே நீலமேகம் தலைமையில் நடைபெறும். தோழர் ஏ. கும்பலிங்கம் வரவேற்றுப் பேசுவார்; தோழர்கள் ஏ வி. பி. ஆசைத்தம்பி, பொ. தருமன் வாழ்த்துரை வழங்குவர்.

* * *

8—7—56 காலை 10-மணியளவில், சென்னை—கோடம்பாக்கம், சன்னதி தெரு, எண் 35/60 இல்லத்தில், தோழர் கே. எஸ். கே. பையா—தோழியர் திலகவதி சீர்திருத்த மறுமணம், தோழர் கே. பி. ஆயம்ணி தலைமையில் நடைபெறும்.

---

# திட்டத்திற்கு நிதி திரட்ட டில்லியின் வழி

ரூ. 150 கோடிக்கு புதுக் கடன் பத்திரங்கள் வெளியீடு

சென்னை, ஜூலை 5—

இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்திற்கு நிதி சேகரிப்பதற்காக ரூ. 1,200 கோடிக்கு பொதுக் கடன் எழுப்ப திட்டமிடப்பட்டுள்ளது.

இதில் ரூ. 700 கோடி கடன் பத்திரங்கள் மூலமும், ரூ 500 கோடி சிறு சேமிப்புகள் மூலமும் எழுப்பப்படுமாம்.

பொதுக் கடன் எழுப்புவதில் முதல கட்டமாக ரூ 150 கோடி வரை கடன் எழுப்புவதற்காக 3 புதிய கடன் பத்திரங்களை வெளியிட இந்தியப் பேரரசு தீர்மானித்துளளதாம்.

புதிய கடனகளின வட்டிகள், அரை ஆண்டுக்கொருமுறை—அதாவது ஜனவரி 16-ம் தேதியும், ஜூலை 16-ம் தேதியும் பட்டுவாடா செய்யப்படுமாம்.

புதிய கடன பத்திரங்கள் சென்னை ரிசர்வ் பாங்கியில் இந்த மாதம் 16-ந் தேதி முதல் 18-ந் தேதி வரை விக்கியாகிக்கப்படுமாம்.

---

# காஷ்மீர் சிக்கலுக்கு பரிகாரம் இல்லை

நேரு-அலி வெட்டிப் பேச்சுக்கள்

லண்டன், ஜூலை 5—

பாரதப் பிரதமர் பண்டித நேருவும், பாகிஸ்தான பிரதமா முகம்மது அலியும் இங்கு கூடிப்பேசியிருக்கின்றனர்.

இருவரும் மகிழ்ச்சிகரமாக உறையாடிய போதிலும்கூட, காஷ்மீர் சிக்கலுக்கு முடிவு ஏதும் காண முயறசிக்கவில்லை என்றும் கூறப்படுகிறது.

பேச்சுக்களின் முடிவில், முகம்மது அலி ஏமாற்றத்துடன் காணப்பட்டார் என்றும் கூறப்படுகிறது.

---

# நேபாள மன்னரை வீழ்த்த சதி!

## முன்னுள் இராணுவ அதிகாரிகள் உட்பட 11 பேர் கைது

காட்மண்டு, ஜூலை 5—

நேபாள மன்னர் மகேந்திராவின் தலைமையில் உள்ள சர்க்காரைக் கவிழ்க்க நடைபெற்ற சதி தக்க சமயத்தில் கண்டுபிடிக்கப்பட்டு, சதியில் ஈடுபட்ட 11 பேர்கள் கைது செய்யப்பட்டதின் மூலம் நிறைவேருமல் தவிர்க்கப்பட்டது என்று சர்க்கார் அறிக்கை ஒன்று கூறுகிறது.

கைதானேருள் முன்னுள் இராணுவத்தினரும் உள்ளனராம்.

மன்னரின் அரண்மனை, சர்க்கார் அலுவலகம், மந்திரிகளின் வீடுகள் இவற்றை ஒரேகாலத்தில் நள்ளிரவில் முற்றுகையிட்டு அனைவரையும் கைது செய்து, சர்க்காரைக் கைப்பற்றுவது என்பதே சதியிலீடுபட்டோரின் திட்டம் என்பது, அவர்களிடமிருந்து பறிமுதல் செய்யப்பட்ட தஸ்தாவேசுகளிலிருந்து தெரியவந்துள்ளதாகவுமசர்க்கார்அறிக்கைகூறுகிறது.

இராணுவத்தின் ஒரு பகுதியைத் தங்கள் சதிக்கு உடந்தையாயிருக்க சதிகாரர்கள் முயன்றதாகவும், அது வெற்றி பெறவில்லை என்றும், எந்த ஒரு தேசியத் தலைவரும் இதில் ஈடுபடவில்லை என்றும் அறிக்கை தகவலளிக்கிறது.

மன்னரையும், மந்திரிகளையும் பாதுகாக்கத் தகுந்த பாதுகாப்பு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டிருப்பதாயும், அதேபோது, தீவிர புலன் விசாரணையும் தொடர்ந்து நடைபெறுவதாயும கூறப்பட்டுள்ளது.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம் ஏ. அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம் சென்னை) வெளியிடப் பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம் ஏ.

